# சிவஞான போதம் தமிழ்.

1. நமது சைவசித்தாந்தம் மஹா சமாஜத்தின் மாதாந்தர பத்திரிகை யாகிய சென்ற 1914 ஏப்ரல் - மேமீத்திய சித்தாந்தத்தில்' 107 வது பக்கத்தில் சிவஞான போதம்' என்ற நூற்பெயரே வடமொழியாயிருக்கத் தமிழ் நூல் என்றெவ்வாறு கூறுவது? என்று தூத்துக்குடி ஸ்ரீமத் பொ. முத்தையபிள்ளையவர்கள் கூறுகிறார்கள், என்னை, 'சிவ' என்னும்பதம் வடமொழியா? தமிழ்மொழியா? வடமொழியென் றால் ' ச்சி' என்ற உச்சரிப்பு வடமொழியாகாதே? ஆன்றோர் "நமச்சிவாயா" என்றே ஆண்டு வந்திருக்கிறார்கள், தவிர வடமொழி 'ஆரிய ருடையது' என்றும் தமிழ் திருவிடருடைய தென்றும் வடமொழியாரே கூறுகிறார்கள். நமது அப்பர் சுவாமிகள்,

"வெந்த நீறருங்கலம் விரதிகட்கெலாம்
அந்தணர்க் கருங்கலம் அருமறையாறங்கம்
திங்களுக் கருங்கலம் திகழுநீண் முடி
நங்களுக் கருங்கலம் நமச்சிவாயவே"

என்று பிரித்துக்கூறியதால் அந்தணர்க்குரியதன்று நமச்சிவாய என்பதாகுங்கண்டீர், சைவருக்குரியது 'ச்சி' சப்தம். "திருந்துதற் சீயென்று தறியகையும்" என்ற தமிழ் மறைக்கூற்றை நோக்க 'ச்சி' என்னு 'நாயோட்டுசப்தம்' (நமனை நாயாகப்பாவித் தோட்டுந்திறம்) பஞ்சாட்சர மொழியின் உச்சரிப்பாகும். அதுவே 'நயனநாம நமச்சி வாய" நாதனாம 'நமச்சிவாய' ஆகும்! ! ஆகவே, எம்பிரான் றன் முக்கிய திருநாமமே தமிழ் என்றாயிற்று, 'சிவஞானபோதம்' என்ற நூற்பெயர் வடமொழியே' என்பது தவறும் அன்பர்மனதை வருத்தும் பயமுமாய் விட்டது.

2. மஹா கைலாயத்தில் இராவணன் பாடியுய்ந்த வேதம் தமிழ் கானமே யென்றும் வெளிப்படுகிறது.

"வண்டம ரோதி மடந்தை பேணின
பண்டை யிராவணன் பாடி யுய்ந்தன
தொண்டர்கள் கொண்டுது தித்த பின்னவர்க்
கண்ட மளிப்பன அஞ்செழுத்துமே."

"பண்டையிராவணன் பாடியுய்ந்தன அஞ்செழுத்துமே."
என்றால் அது 'நமச்சிவாய' வேதமே. அது மேற்கூறியவாறு 'தமிழ்' வேதமேதான்.

3. மேலும் 'புரமெரித்தார் திருமகனாராகிய' ஞானசம்பந்தவேள்,

"வெந்த வெண்ணீறணி வீரட்டானத் துறை வேந்தனை
அந்தணர்தங் கடவூருளானை, யணி காழியான் -
சந்த மெல்லாமடி சாத்தவல்லமறை, ஞானசம்

பந்தன் செந்தமிழ், பாடியாடக் கெடும் பாவமே."

என்ற பதிவாக்கில் அணிகாழியான் அடி (யைச்) சந்தமெல்லா (ஞ்சொல்லி ச்சிரசில்) சாத்தவல்ல மறை, ஞானசம்பந்தன் செந்த மிழ், என்றாயிற்று. 'மறைஞான சம்பந்தன்' என்று பதம் பிரிக்கலாமென்று மயக்க இடமில்லை. பெரியபுராணத்தில் 'ஞான சம்பந்தன்' என்ற அருமைத்திருநாமம், அபரஞானமல்லாத 'சிவஞான' சம்பந்தத்தால் என்று. விளக்கப்பட்டுள்ளது கண்டீர். இப்போதுலாவும் நான்கு வேதம் (இருக்கா திமறை) மேற்கூறிய 'நமச்சிவாய' வேதமாயிருந்தால், அவ்வேதியர்களுக்கு நமச்சிவாய 'தீட்சைசமய தீட்சையாயில்லாதிருப்பானேன் என்னும் அனுபவப் பிரமாணத்தைப் பிள்ளையவர்கள் ஆழ்ந்து நோக்கின் இவ்வாறு எழுதார்கள் ! எழுதார்கள்! சிவ! சிவ! சிவ! சிவ!

**4.** தவிர, முதல் சூத்திரத்திலுள்ள ‘அந்தமாதி என்மனார் புலவர்' என்னுங்கூற்றை நோக்க, முதனூலில்லா திருந்தால் ரௌரவாகமம் கூறும், என்று சொல்லாது 'என்மனார் புலவர்' என்பானேன்? இதனால் வடமொழி சம்பந்தமும் 'ரௌவாகம் சம்பந்தமும்' இல்லையென்ப தாயிற்று. இன்னும் நியாயங்கள் பலவுள்.

ஹர. சண்முக முதலியார்.

சித்தாந்தம் - 1914 வ - ஜூன் மீ

---